வளமுடன் வாழ! ஒன்றாக நல்லது கொல்லாமை வரமருள் வேலா!!

விலை ரூ. 10.00

# கௌமார அமுதம்

ஒளி : 21
கதிர் : 11




கௌமார மடாலய நிகழ்ச்சிகளை நேரலையில் காண

சுபகிருது ஆண்டு தை மாதம் (சனவரி-2023)

பண்டு விண்ணோர்குலம் வாழப் புரந்து, பழனியில்ஓர்
தண்டுடன் நின்று, விளையாடும் மாண்புடைச் சற்குரவற்
கண்டுதொழுது துதிபாடி நெஞ்சில் கருதும் உண்மைத்
தொண்டு செய்வார்க்கு அவன் வேலும் மயிலும் துணை செய்யுமே

சிறப்பாசிரியர்
திருப்பெருந்திரு. இராமானந்த குமரகுருபர சுவாமிகள்



கௌமார மடாலயத்தில் 15 நாட்கள்
கிராமக் கோயில் பூசாரிகள்
இலவசப் பயிற்சி முகாம்
சிறப்பாக நடைபெற்றது





சிரவை ஆதீனம் ஆதிகுருமுதல்வர்
மகாசந்நிதானம்
திருவருள்திரு. இராமானந்த சுவாமிகள்
66 ஆம் ஆண்டு நிறைவுக் குருபூசை விழா





மாநில முருகபக்தர்கள் பேரவை அறக்கட்டளை சார்பில்
திருப்பூர் கொங்கணகிரியில் மலர்க் காவடிப் பெருவிழா





ஒன்றாக நல்லது கொல்லாமை

# கௌமார அமுதம்

திருவள்ளுவராண்டு 2053
சுபகிருது தை
ஒளி : 21 கதிர் : 11
2023 சனவரி

திருப்பெருந்திரு. **இராமனந்த குமரகுருபர சுவாமிகள்**

சிறப்பாசிரியர்

***

**ஆசிரியர் குழு**
அழ. முத்துப்பழனியப்பன்
கு. சிவலிங்கம்
கா. உமாபதி

***

**நிழற்படம்**
பெ, ரமேஷ்

***

**அச்சிட்டோர் :**
ருக்மணி ஆப்செட் பிரஸ்
E-32, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
கோயம்புத்தூர் - 641 021.
போன் : 0422 2672789

**பொருளடக்கம்**



**சந்தா விபரம்**

| | |
|---|---|
| தனி இதழ் | ரூ.10.00 |
| ஆண்டுச்சந்தா | ரூ.100.00 |
| ஆயுள் சந்தா | ரூ.1000.00 |

கௌமார அமுதம்
ஆசிரியர், கௌமார மடாலயம்,
சின்னவேடம்பட்டி (அஞ்சல்)
கோவை - 641 049. போன் : 2666370
இணையதளம்: www.kaumaramutt.org
மின் அஞ்சல்: kaumaramutt@gmail.com

**உங்கள் சிந்தனைக்கு......**

இனென்பொறிமுன் மவ்விகரம் ஏய்ந்தன்ன வாழ்வில்
நனெஞ்சுழல் மாய்தல் நவை.

- வருக்கக் குறள்

நிலையற்ற வாழ்வில் வாழநாளை வீணாகக் கழத்து விட்டு இறந்துபோவது மனிதருக்கு குற்றமாகும் என்பதாம்.

# மறைமொழி

இராமானந்த குமரகுருபர சுவாமிகள்
சிறப்பாசிரியர்

சென்ற இதழின் தொடர்ச்சி:

**மன்மதன் அலர் வாளிகட்கு அயர்ந்து, இளமை**
**மங்கையர்க்கு ஏவல் செய்து, உழல்வேன்;**
**கொல் மறலியின் கைத் தண்டினை, நரகைக்**
**குறித்து, உனைச் சரண் புகேன்; கொடியேன்;**
**தென் மலி நந்தி, அயன் சிறை விடுப்பச்**
**செப்பியும், விடாது, அரன் வேண்டத்**
**தன்மம் ஆர் உபதேசம் புரி இரங்க-**
**சாமியூர்த் தண்டபாணியனே!**

உலகத்தின் நிலையாமையை உணர்ந்து அவற்றை மற்றையோருக்கும் உணர்த்தி வந்தவர் தவத்திரு கந்தசாமி சுவாமிகள். கொல்லாமைக் கோட்பாட்டை உலகிற்கு உணர்த்தும் பொருட்டு தம் பாக்களால் அதனை வலியுறுத்தியவர். அவரது கந்தபுராணச் சாரத்தை நாம் தொடர்ந்து கண்டு வருகின்றோம் அவ்வகையில் தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்

**மன்மதன் அலர் வாளிகட்கு அயர்ந்து, இளமை**
**மங்கையர்க்கு ஏவல் செய்து, உழல்வேன்;**
**கொல் மறலியின் கைத் தண்டினை, நரகைக்**
**குறித்து, உனைச் சரண் புகேன்; கொடியேன்;**

எக்காலமும் இறைவன் சிந்தனையிலேயே மூழ்கி இருக்க வேண்டும். அவற்றுக்குத் தடையாக விளங்குவது தனது இளமை என்கிறார் சுவாமிகள். மனிதனின் மனமானது சிற்றின்பத்தில் திழைத்து இறைவனின் அருளால் கிட்டும் பேரின்பத்தை இழந்து விடுகிறது. அதனையே சுவாமிகள் மன்மதனது மலர்க்கணைபட்டு தான் சோர்ந்து போய்விடாது காக்க வேண்டும் என்று வேண்டுகின்றார்.

இளமைக்காலத்தில் இறைவன்பால் மனம் செலுத்தாது மங்கையர்க்கு ஏவல் செய்து வீணாகக் காலத்தைக் கழிக்க வேண்டாம். அவ்வாறு இருப்பது வீணான வாழ்க்கையாகும். நிலை யில்லாத இன்பத்திற்கு ஆட்பட்டு நிலையான இன்பம் தரக்கூடிய

இறைவனது திருப்பாதங்கள் அடைவதை இழந்து விடக்கூடாது என்று சுவாமிகள் வலியுறுத்துகின்றார்.

இயமன் வரும்போது வாழ்வின் நிலை அறிந்து வருந்தி பயன் ஏது? எமனின் கதாயுதத்தால் தாக்குண்டு நரகம் அடைந்தால் இந்த வாழ்வானது வாழ்ந்து எப்பயனைக் காண முடியும். இந்நிலைக்கு வருத்தம் கொண்டு பயன் இல்லை. இதனையே புறநானூற்றுப் பாடலில் நரிவெரூஉத்தலையார்

**கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திறல் ஒருவன்**
**பிணிக்கும் காலை இறங்குவீர் மாதோ**

எனப் பாடியுள்ளார். அதாவது கூர்மையான ஆயுதத்தை வைத்துக் கொண்டிருக்கக் கூடிய இயமன் பாசக் கயிற்றினை வீசி இறுதியாக நம் உயிரை எடுக்கும் பொழுது வருந்தி எவ்விதப் பயனும் இல்லை என்று விளக்குகிறார். மேலும் அப்பாடலிலே

**நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்**
**அல்லது செய்தல் ஓம்புமின்**

என்று கூறியிருப்பார் நல்லது செய்யாவிட்டாலும் பரவா யில்லை, மற்றையோருக்குத் தீங்கு ஏற்படாத வண்ணம் வாழ வேண்டும் என்று கூறி இருப்பார்.

தவத்திரு கந்தசாமி சுவாமிகள் கூறிய கருத்தானது உலகப் பொதுமறையில் திருவள்ளுவரும் முன்னரே காட்டியிருப்பார்,

**காமம் வெகுளி மயக்கம் இம்மூன்றன்**
**நாமம் கெடக்கெடும் நோய் என்பார்.**

காமம் வெகுளி மயக்கம் இந்த மூன்றையும் எவர் ஒருவர் தவிர்க்கின்றாரோ அவரே தன்னுடைய பெயர் கெடாது இந்த உலகத்தில் வாழ்வார் என்று வலியுறுத்துகின்றார்.

**கடல்அன்ன காமம் உழந்தும் மடல்ஏறாப்**
**பெண்ணின் பெருந்தக்கது இல்.**

கடல்போல காமம் வந்து வருத்தியபோதும் மடல் ஏறுதல் இல்லாத பெண் பிறவி போல் சிறப்புடைய பிறவி இந்த உலகத்தில் இல்லை என்று உலகப் பொதுமறை கூறுகிறது.

அருளாளர்கள் பலரும் சுவாமிகளின் கருத்துக்கு ஏற்ப முன்னமே இதனை வலியுறுத்தியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. அதன்படி அருணகிரிநாதர் பல இடங்களில் காமத்தினால் வரும் துன்பத்தை எடுத்துரைத்துள்ளார்.

- தொடரும்

# முப்பெரும் விழா

இராமானந்த குமரகுருபர சுவாமிகள்
சிறப்பாசிரியர்

ஆதி குருமுதல்வர் குருமகா சந்நிதானம் திருவருள்திரு. இராமானந்த சுவாமிகள் 66 வது ஆண்டு நிறைவுக் குருபூசை விழா, தமிழ்ச் சான்றோர்க்கு விருது வழங்கும் விழா, கிராமப் பூசாரிகள் பயிற்சி நிறைவு விழா என முப்பெரும் விழாவாக சிரவணபுரத்தில் கௌமார மடாலயத்தில் சுபகிருது ஆண்டு மார்கழி 25 ஆம் நாள் (09.01.2023) திங்கட்கிழமை நடைபெற்றது.இவ்விழாவிற்கு

**சிரவை ஆதீனம் தவத்திரு இராமானந்த குமரகுருபர சுவாமிகள் தலைமை வகித்தார்கள்.**

மைலம், பொம்மபுர ஆதீனம் தவத்திரு. சிவஞானபால்ய சுவாமிகள்
பழனி ஆதீனம் தவத்திரு சாது சண்முக அடிகளார்
தென்சேரிமலை ஆதீனம் தவத்திரு முத்துசிவராம அடிகளார்
ஆகியோர் கலந்து கொண்டு ஆசி வழங்கினர். இவ்விழாவில் தமிழ்ச் சான்றோர்க்கு விருது வழங்கப்பட்டது.

**விருதாளர்களின் சிறப்பும் வழங்கப்பட்ட விருதும்**

**விருது பெறுவோர்**

**வளர்த்த சான்றோர்**

| | | |
|---|---|---|
| 1. | திரு.வலையப்பேட்டை கிருஷ்ணன் | திருப்புகழ் பரப்பும் திருவருட்செல்வர் |
| 2. | திரு.அரவிந்த் வெங்கடாசலம் | முத்தமிழ் ஆன்மீகச் செல்வர் |
| 3. | வி.எஸ்.கிருஷ்ணன் | திருப்புகழ் போற்றும் இருமொழித் தொண்டர் |
| 4. | திரு.வெ.அனந்தகிருட்டிணன் | திருநெறிய தமிழ்த் தொண்டர் |
| 5. | திரு.க. வேலுக்குட்டிசாமி | கௌமார நெறித் தொண்டர் |

**வழிகாட்டும் இசை ஆசிரியை**

| | | |
|---|---|---|
| 6. | திருமதி.கவிதா பாலசுப்பிரமணியம் | நல்லிசைச் செல்வி |

**வளரும் நாற்றங்கால்**

| | | |
|---|---|---|
| 7. | செல்வி. பவதாரணி குணசேகரன் | சொல்லின் செல்வி |

| | | |
|---|---|---|
| 8. | செல்வன்.மு.சிரவை மதிராஜா | திருப்புகழ் இன்னிசைச்செல்வன் |
| 9. | செல்வி. உமாநந்தினி பாலகிருஷ்ணன் | தெய்வத் தமிழிசைச் செல்வி |
| 10 | செல்வன்.வி. பிரசன்னா பழனியப்பன் | சந்தத் தமிழ் கொஞ்சும் மணி |
| 11. | செல்வன்.பிரனேஷ் சங்கர் | இயல்தமிழ்ச் செல்வன் |

**திரு. அரவிந்த் வெங்கடாசலம்**

திரு.அரவிந்த் வெங்கடாசலம், கோவையில் புகழ்பெற்ற தணிக்கையாளர்களில் ஒருவர். தொழில்நுட்பவியல் சார்ந்து பல புதிய கருவிகளை வடிவமைத்தவர். இவர் தாய் **ஸ்வர்ணா அம்மா**, அம்மாவின் திருமகன் அரவிந்த், தன் துணைவியார் மருத்துவர் நீலா அவர்களுடன் இணைந்து 1994ல், திருநெறிய தமிழ் மன்றம் தொடங்கித் தாயின் தெய்வப் பணிகளைத் தொடர்ந்து நடத்துகிறார்.

இந்தப் பின்னணியில் அரவிந்த், தமிழ்ப் பண்பாடு, தத்துவம் சமயம் சார்ந்து ஆற்றிவரும் பணிகள் காலம் கடந்து நிற்கும். குறிப்பாக, மெய்கண்டார் நடைப்பயணத் தவம்! கோவையில் தொடங்கிச் சிதம்பரம் வரையிலும், ஏறக்குறைய ஆயிரம் கிலோமீட்டர் தூரம் கால்கள் வருத்தி மகிழ, மகிழ்ந்து வருந்தச் செய்த பயணம். உலகம் போற்றும் சிவஞான போதத்தின் ஆழ்ந்த தத்துவக் கோட்பாடுகளை எளிய மக்களிடையே கொண்டு சென்ற முயற்சி, அப்படியே இணையதளம் வாயிலாக அவர் நடத்தி வரும் சிவஞான போத வகுப்புகள் இளைஞர்களிடையே புதிய எழுச்சி ஏற்படுத்தியுள்ளது.

நூல் வெளியீடு, வகுப்பு நடத்துதல், தலப் பயணம், திருவாசக முற்றோதல், சிறப்பு வழிபாடுகள் என்பன போலத் தமிழ்ச் சமயம் மொழி, பக்தி நெறிகளுக்கு ஆற்றிவரும் பணிகளைப் பாராட்டித் திரு.அரவிந்த் வெங்கடாசலம் அவர்களுக்கு முத்தமிழ் ஆன்மீகச் செல்வர்என்ற விருதை வழங்குவதில் ஆதீனம் பெருமை கொள்கிறது

**வலையப்பேட்டை ரா.கிருஷ்ணன்**

திரு.கிருஷ்ணன், தஞ்சை மாவட்டம் சுவாமி மலைக்கு அருகிலுள்ள வலையப் பேட்டையில் பிறந்தவர். (1949). கர்நாடக சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான சியாமா சாஸ்திரிகளின் நேரடி வழிப் பேரன்.

கிருஷ்ணன்-தமையனார் திரு ராமசேஷன் (சேக்கிழார் தாசன்) இருவரும் சேர்ந்து எழுதிய "அருணகிரிநாதர் அடிச்சுவட்டில் என்ற

நூல், திருப்புகழ் பாடல் பெற்ற முருகன் தலங்களுக்கு அடியார்களை அழைத்துச் செல்லும். திரு கிருஷ்ணன் ஆங்கிலத்தில் எழுதிய " MURUGA THE EMBODIMENT OF BEAUTY AND VALOUR" என்ற நூல் ஆப்கானிஸ்தான் தொட்டுத் தென்குமரி வரை பரவி இருந்த முருகவழிபாட்டை, அரிய புகைப்படங்களுடன் விளக்கும் அற்புத நூல். "THE GREAT TEMPLE OF MADURAI MEENAKSHI" என்ற நூல் ஓர் அருமையான வண்ணப் பதிவேடு. கோயில் நிர்வாகமே வெளியிட்ட பெருமை உடையது.

திருமுறை, திருப்புகழ் சார்ந்து இருபத்தைந்துக்கும் மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார். "முழுவதும் அழகிய குமரன்" "குறமகள் தழுவிய குமரன்" "முடியும் நடுவும் அடியும்" போன்றவை புகழ்பெற்ற முருக இலக்கியங்கள். நூலசிரியாராக மட்டுமின்றி உரையாசிரியராகத் திருப்புகழ் பலவற்றுக்கும், கந்தரனுபூதிக்கும் உரை எழுதியுள்ளார்.

வாழ்வும் மூச்சும் முருக வழிபாடே எனத் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு தம்மைக் குறமகள் தழுவிய குறவனுக்கு அடிமைப் படுத்திக் கொண்ட வலையப் பேட்டை ரா.கிருஷ்ணன் அவர்களுக்கு **"திருப்புகழ் பரப்பும் திருவருட்செல்வர்"** என்ற விருதை வழங்குவதில் சிரவை ஆதீனம் பெருமை கொள்கிறது.

**திரு.வி.எஸ்.கிருஷ்ணன்**

திரு.வி,எஸ்.கிருஷ்ணன் திருப்புகழ் அன்பர்; மலையாளத்தைத் தாய்மொழியாகக் கொண்டவர்; சைவத் திருமுறைகளிலும், நாலா யிரத் திவ்யப்பிரபந்தத்திலும் பயிற்சி உடையவர். அவருடைய பணியில் தலையாயது முருக இலக்கியங்களையும், பக்தி நெறி நின்ற சான்றோர்களையும் பற்றி ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டு வருவது. THIRUPPUGAZH – GLORY TO LORD MURUGA" – "SAINTS OF SOUTH INDIA" "ARUT PRAKASA VALLALAAR " – "A SAINT OF UNIVERSAL VISION" என்ற நூல்கள் இந்த வரிசையில் வந்து வெளிநாட்டில் வாழும் தமிழர்களால் போற்றப்படுகின்றன. கந்தர் அலங்காரம், கந்தர் அநுபூதி நூல்களைத் தமிழ்ப் பாடல்களுடன் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து எழுதியது ஒரு அறிவுக் கருவூலம் எனவே தகும்.

சைவத் திருமுறைகளிலும், நாலாயிரத் திவ்யப்பிரபந்தத்திலும் பயிற்சி உடையவர். அவருடைய பணியில் தலையாயது முருக இலக்கியங்களையும், பக்தி நெறி நின்ற சான்றோர்களையும் பற்றி ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டு வருவது. "THIRUPPUGAZH – GLORY TO LORD MURUGA" – "SAINTS OF SOUTH INDIA" "ARUT PRAKASA VALLALAAR " – "A SAINT OF UNIVERSAL VISION" என்ற நூல்கள் இந்த வரிசையில் வந்து வெளிநாட்டில் வாழும் தமிழர்களால் போற்றப்படுகின்றன.

ஞானப் பூக்களை முருகன் திருவடியில் தூவி வழிபட்டு வருகிறார். திரு.எஸ்.வி.கிருஷ்ணன் அவர்களுக்குத் “**திருப்புகழ் போற்றும்**” இருமொழித்தொண்டர் என்ற விருதை வழங்கிச் சிரவை ஆதீனம் பெருமைப்படுகிறது.

**திரு.வெ.அனந்த கிருட்டிணன்**

தென்சேரி மலைக்கு அருகிலுள்ள வாவிபாளையச் சிற்றூரில் வேளாண் குடியில் பிறந்தவர். ஆன்மிகத் தொண்டர் சமூக ஆர்வலராகவும் இருக்கிறார். “**பல்லடம் வனம் இந்தியா**” அறக்கட்டளை கலை, இலக்கியப் பிரிவு இயக்குனராக இருந்து, ஆன்மிக நிகழ்ச்சிகளை ஒன்றிணைத்து நடத்துகிறார். தம் சொந்த ஊரான வாவிபாளையத்தில் இறையருள் மன்றம் என்ற அமைப்பை நிறுவித் தமிழ் மரபுகளை வளர்த்து வருகிறார். தெய்வத் தமிழ் வழியே சடங்குகள் செய்யப் பலருக்கு வழிகாட்டி வருகிறார்.

சைவ சமய நெறி மேன்மையை மக்களிடையே பரப்பிவரும் திரு.அனந்த கிருட்டிணனுக்குத் “**திருநெறிய தமிழ்த் தொண்டர்**” என்ற விருதை வழங்கிப் பாராட்டுவதில் சிரவை ஆதீனம் பெருமை கொள்கிறது.

**திரு.வேலுக்குட்டி சாமி**

உடுமலைப் பேட்டைத் தேவனூர் புதூரில் பிறந்த நல்தொண்டர். கௌமாரத் திருமடத்துடன் முப்பது ஆண்டுகள் தொடர்புடையவர்

“கைத் தொண்டு செய்யும் கடப்பாட்டுடன் கௌமார நெறியை மக்களிடம் பரப்பி வரும் அடியார். தம் பகுதிகளில், பல ஊர்களில் நடக்கும் விழாக்களிலும், வீடுகளில் நடக்கும் நிகழ்ச்சிகளிலும் தெய்வத்தமிழ் வழியே சடங்குகளை நடத்தியும், பிறரை நடத்துமாறு செய்தும் வருபவர். மாநில முருக பக்தர்கள் பேரவை உறுப்பினராக இருந்து முருகன் பெருமையைப் பரப்பி வரும் அடியார். கௌமார நெறியில் உறைப்பு கொண்டு மக்களுக்குச் சேவையை இடைவிடாது செய்து வரும் திரு வேலுக்குட்டி சாமி அவர்களுக்குக் “**கௌமார நெறித் தொண்டர்**” என்ற விருதை வழங்கிப் பாராட்டுவதில் சிரவை ஆதீனம் பெருமை கொள்கிறது.

**திருமதி கவிதா சுப்பிரமணியம்**

கவிதா சுப்பிரமணியம். சிரவை ஆதீனத்து மாணவர் கற்றுக்கொள்ளும் வண்ணம் பாடல்களை எளிமையாக, ஆர்வத்துடன் பாடிக்காட்டும் திறன் உள்ளவர். திருமடத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகளின் போதும், குருவழிபாடு, அவதாரம் போன்ற திருக்கோயிலில் நடக்கும் விழாக்கள், ஆடிக்கிருத்திகை, கந்தசஷ்டி, தைப்பூசம் போன்ற பெரிய வழிபாடுகளிலும் குழந்தைகளுடன்

தானும் அமர்ந்து பாடும் கவிதாவின் இசைத்திறன், கேட்போரை ஈர்த்து மகிழச் செய்யும், குழந்தைகளின் ஆர்வத்தை மேலும் தூண்டும். தெய்வத்தமிழ் நாற்றாங்காலில் வளரும் மாணவரின் நெஞ்சில், இசையை நீராக ஊற்றிப் பாதுகாக்கும் திருமதி கவிதா சுப்பிரமணியம் அவர்களுக்கு **"நல்லிசைச் செல்வி"** என்னும் விருது வழங்கிப் பாராட்டுவதில் சிரவை ஆதீனம் பெருமை கொள்கிறது.

**செல்வி பவதாரணி குணசேகரன்**

கொஞ்சும் தமிழ்ச் செல்வி சிரவை ஆதீனம் வளர்க்கும் நாற்றங்காலில் இருக்கும் ஆன்மீகப் பயிர். தமிழ்மொழி இலக்கியம், பண்பாடு, தொன்மை சார்ந்த செய்திகள், தமிழ் வளர்த்த புலவர்கள், சான்றோர்கள், ஆன்மீகம் பக்தி என எல்லாப் பிரிவுகளிலும் தன்னுடைய வீறு கொண்ட பேச்சால் சொல் வெளிப்பாட்டுத் தெளிவால் கேட்போரை மயக்கும் ஆற்றல்மிக்க மாணவி

தமிழக ஆளுநர், தெலுங்கானா ஆளுநர் போன்ற உயர்நிலைத் தலைவர்களும் பவதாரணியின் சொற்பொழிவைக் கேட்டுப் பாராட்டியுள்ளார்கள். வளர்ந்து வரும் இந்த நாற்றை தெய்வத் தமிழ்ப் பயிரைப் பாராட்டிச் செல்வி பவதாரணி குணசேகரனுக்குச் "**சொல்லின் செல்வி**" எனும் விருதை வழங்கிச் சிரவை ஆதீனம் பெருமைப்படுகிறது

**செல்வி உமா நந்தினி பாலகிருஷ்ணன், உடுமலை.**

இளம் ஓதுவார் என்ற சிறப்பினைப் பெற்ற இசைவாணி. சிரவை ஆதீனத் தொண்டர்: சிறுவயது முதல் திருமுறைகள் மீதும், ஆன்மிகத்தின் மீதும் பற்றுக் கொண்டவர்.

இந்தியாவில் திருமுறைப் பாடல்களை இளம் வயதில் அதிகமாகப் பாடியவர் என்று சாதனைப் புத்தகத்தில் இடம் பிடித்தவர். தெலுங்கானா ஆளுநரின் பாராட்டுதலைப் பெற்றவர். இவ்வளவு சிறப்புகள் கொண்ட செல்வி உமா நந்தினி பாலகிருஷ்ணனின் இசைக் கொடையைப் பாராட்டி வாழ்த்திச் சிரவை ஆதீனம் **"தெய்வத் தமிழிசைச் செல்வி"** என்னும் விருது வழங்குவதில் பெருமைப்படுகிறது,

**செல்வன் மதிராஜா**

சிரவை ஆதீனப் பள்ளி மாணவர். கற்றவர்கள் கூடப் பிழையில்லாமல், சந்தம் மாறாமல் பாடுவதில் தடுமாறும், அருணகிரி நாதரின் திருப்புகழ் மட்டுமல்ல,வண்ணச்சரபர் தண்டபாணி சுவாமிகள், சிரவை ஆதீனக் கவிக்கடல் கந்தசாமி சுவாமிகளின்

திருப்புகழ் பாடல்களையும் மிக எளிதாக, இசைக் குறிப்பு மாறாமல் பாடுவதில் தேர்ந்தவர்

சிரவை ஆதீன நிகழ்ச்சிகளில் நேரிலும், இணைய வழியிலும் இவருடைய பாடும் விதத்தைக் கண்டும் கேட்டும் தமிழகம் மட்டுமில்லாமல் உலகத் தமிழர் பலரும் வியந்து பாராட்டுகிறார்கள்.

தமிழ் இசையால் தாம் படித்த ஆதீனத்துக்கும் தெய்வத்தமிழுக்கும் பெருமை சேர்க்கும் செல்வன் மதிராஜாவைப் பாராட்டிச் சிரவை ஆதீனம் **"திருப்புகழ் இன்னிசைச் செல்வன்"** என்ற விருதை வழங்குவதில் மகிழ்ச்சி அடைகிறது

**செல்வன் பிரசன்னா பழனியப்பன்**

செந்தமிழ் வளர்த்த செட்டிநாட்டில் வளர்ந்து வரும் தமிழ்ப் பயிர். சிரவை ஆதீனத் திருத்தொண்டர். இளம் வயதிலேயே சமயச் சொற்பொழிவு ஆற்றும் திறம் வாய்க்கப் பெற்றவர்

அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ் போலவே, சந்தக் குழிப்புடன் புதிய திருப்புகழ்ப் பாடல்களைப் பாடி நூலாக வெளி யிட்டுள்ள சாதனையாளர். '**குகப்புகழ்**' என்னும் அந்த நூலை மாநில முருக பக்தர்கள் பேரவையே வெளியிட்டிருப்பது அவர் திறமையை ஏற்றுக் கொண்டமைக்குச் சான்று.

அருமையான சொல்லாட்சி, தாளகதிக்கேற்ற சந்தம் கலந்து தமிழிசை துள்ளும் முருகபக்தியால் விளைந்த உணர்வு இவை நிரம்பப் பெற்ற நூல் '**குகப்புகழ்**' குழந்தை முருகனின் புகழ்பாடும் பிரசன்னா பழனியப்பன் எதிர்காலத்தில் முருக இலக்கியப் பரப்பில் தனியிடம் பெறவேண்டும் என வாழ்த்திச் சிரவை ஆதீனம் பிரசன்னாவுக்குச் **"சந்தத் தமிழ் கொஞ்சும் மணி"**என்னும் விருதை அளித்துப் பெருமைப்படுகிறது

**செல்வன் பிரனேஷ் சங்கர்**

கோவைக் கல்லூரி மாணவர். சிரவை ஆதீனத் திருத்தொண்டர். திருமுருக கிருபானந்த வாரியாரின் அருட்பபணியைப் பின்பற்றித் தம் எழுத்திலும் பேச்சிலும் கையாளும் இளைஞர். கொங்கு நாட்டு இலக்கியங்கள் பற்றிக் குறிப்பாகச் சிரவை ஆதீன அருளாளர்களின் நூல்களிலிருந்து தற்போது பல சொற்பொழிவுகள் நிகழ்த்தி வருகிறார்.

செல்வன் பிரனேஷ் சங்கரின் தமிழ்ப்பணி, தமிழார்வம், பேச்சாற்றல் இவற்றைப் பாராட்டிச் சிரவை ஆதீனம் அவருக்கு **"இயல்தமிழ்ச்செல்வன்"**என்ற விருதை வழங்குவதில் பெருமைப்படுகிறது

தவத்திரு.கந்தசாமி பனுவல்திரட்டு

# தென்கயிலாயச் சத்திநாயக மாலை மூலமும் உரையும்

- சொல்லரசு. வீ. சிவஞானம், கோவை

சென்ற இதழின் தொடர்ச்சி:

**நத்தஅரும்பொருள்கள்உடன்உடன்நல்கும் நாத!**
**நீ உளத்து உறல் கருதேன்**
**பித்தனாய் உலகப்பொருள் விழைந்து அவமே**
**பெருங்கடல் கானகத்து உழன்றேன்;**
**சித்தமீது உன்னும்தவத்தரைஉதிப்புஇல்**
**சின்மய ஆனந்த வான் தலத்தில்**
**வித்து அருள் வடிவா விளங்கு தென்கயிலை**
**வித்தகா! சத்திநாயகனே! 25**

**அருஞ்சொற்பொருள்:**

நத்த - விருப்பம். அரும்பொருள்கள்-பக்தி, வைராக்கியம் ஞானம், முத்தி உடன் - உடனுக்குடன் - கடல் - ஆசையாகிய கடல். கானகம் - அறியாமையாகிய காடு. உன்னும் - தியானிக்கும். உதிப்பு - பிறப்பு, சின்மய - ஞானமயம். ஆனந்த - பேரின்ப. வான் தலத்தில் - சிதாகாசத்தில். வித்து - விதைக்கின்ற

**பொழிப்புரை:**

சிந்தத்தில் வைத்துத் தியானிக்கும் தவமுடையவரை மீண்டும் பிறப்பில் வராத ஞானமய பேரின்ப சிதாகாசப்பெருவெளியில் வைத்து, அருள்வடிவாய் விளங்கும். தென்கயிலாய வித்தகனே! சத்தியின் நாயகனே! விரும்பும் அரிய பொருள்களாகிய பத்தி, வைராக்கியம், ஞானம், முத்தி முதலியவற்றை உடனுக்குடன் வழங்கும் தலைவ!

நீ என் உள்ளத்தில் பொருந்தி இருப்பதை நான் அறியேன்; பித்தனாய் உலகப்பொருள்கள் மீது விருப்பம் கொண்டு, வீணே பெரிய கடல்அளவாய் ஆசையையும், (அடர்ந்த இருள் சூழ்ந்த) காடு போல் அறியாமையும் கொண்டு உழல்கின்றேன்

**இன்னம் எத்தனை ஆர் உயிர் இனம் சேய் என்று**
**எனைக் கொள விடுப்பை கொல்? அன்றி**
**நின் அரும் சுதன் என்று எடுத்து எனை முத்திநிமல வீடு**
**அளிப்பை கொல்? அறியேன்;**
**பொன் அவிர் உதய அத்தமன வெற்பு என்னப்**
**பொலிகரத்தால் உலகு இருளை**
**வெல் நலச் சுடர்ப் பந்தாடு தென்கயிலை**
**வித்தகா! சத்திநாயகனே! 26**

**அருக்கசொற்பொருள்றேன்.**

சேய் - குழந்தை. சுதன்- மகன். நிமல - மலமற்ற. உதய வெற்பு- கிழக்கில் உள்ள மலை. அத்தமன வெற்பு - மேற்கிலுள்ளமலை நலச்சுடர் - சூரியன்

**பொழிப்புரை:**

பொன்போல் ஒளிர்வதும், கிழக்கு மலையில் உதிப்பதும், மேற்கு மலையில் மறைவதும் கிரணங்களால் உலக இருளைப் போக்குவதும் ஆகிய சூரியனைப் பந்து போல் எடுத்து ஆட்டும் கைகளுடன் கூடிய தென்கயிலை மலையாய் விளங்கும் வித்தகனே! சத்தியின்நாயகனே!

இன்னும் எத்தனை உயிர் இனங்களில் என்னைப் பிள்ளையாய்ப் பிறக்க வைப்பாயோ? அல்லது நினது அரிய மகன் என்று எடுத்து, எனக்கு முத்தியாகிய மலமற்ற வீட்டினைஅளிப்பாயோ? நான்அறியேன்.

**கற்பனை மதுரச் சொற்பொருள் அணி ஆர்**
**கவி அளவு அறப்பொழிந்து, உனது**
**பொற்பதத்து அணியப் புரிந்து, எனை முற்றும்**
**புரப்பது நின் பரம்; எந்தாய்!**
**பொற்பு அமை நமது குலத்தினுக்கு உரிமை**
**பொருந்தும் நல்மாமன் என்று இமய**
**வெற்பு அருள் மகளைக் கொண்ட தென்கயிலை**
**வித்தகா! சத்தி நாயகனே! 27**

**அருஞ்சொற்பொருள்:**

மதுர - இன்மையான. புரப்பது - பாதுகாப்பது. பரம் - பொறுப்பு.

**பொழிப்புரை:**

எம் தந்தையே! மலையாய் விளங்கும் நமது குலத்துக்கு உரிமை உடைய நல்ல மாமன் என்று இமய வெற்பன் தந்த மகளைத் (பர்வதராஜனின் மகள் பார்வதியைத்) திருமணம். செய்து கொண்ட தென்கயிலை மலையாய் விளங்கும் வித்தகனே! சந்தியின் நாயகனே!

இனியகற்பனை, சொல்லழகு, பொருளழகு முதலியன பொருந்த எண்ணற்ற கவிகள் பாடி உனது பொன் போன்ற திருவடியைக் குறுக, என்னை முழுவதும் பாதுகாப்பது உனது பொறுப்பு.

**காலனுக்குஅச்சம்அளிக்கும்வெண்நீற்றுக்**
**கவசமும், கண்டிகைஅணியும்,**
**சீலம்என்றுஅணியேன்; மானிடர்க்குஅஞ்சச்**
**செயும்பணிதேடினன்திரிந்தேன்;**
**ஞாலம்ஆர்மலையில்வேற்றுமைஉறாது,**
**நயக்கும்அல்வழியில்த்தன்குறியே**
**மேல்அமைந்து, ஓங்கவிளங்குதென்கயிலை,**
**வித்தகா! சத்தி நாயகனே! 28**

**அருஞ்சொற்பொருள்:**

கவசமும் - காப்பும். கண்டிகை - உருத்திராக்கம். சீலம் - சைவ ஒழுக்கம். தன்குறி - சிவலிங்க அடையாளம்.

**பொழிப்புரை:** உலகில் காணப்படும் பல மலைகளைப் போலவே காண்பதற்கு வேற்றுமை காட்டாது, அதே சமயம் விரும்பும் அடியார்களுக்குச் சிவலிங்க அடையாளமாகவே அமைந்து, உயர்ந்து நிற்கும் தென்கயிலை. மலையாய் விளங்கும் வித்தகனே! சத்தியின் நாயகனே!

இயமனுக்கு அச்சத்தைத் தரும் வெள்ளை நிறத் திருநீற்றுக் காப்பும், உருத்திராக்க மணி மாலையும், சைவ ஒழுக்கம் என்று அறிந்து, அணிந்தேன் இல்லை; மனிதர்களுக்குப் பயந்து செய்யும் பணியையே (ஏவலையே) தேடித் திரிந்தேன்.

- தொடரும்

# சுந்தரர் சொற்றமிழ்

## பெரிய நாயக்கன் பாளையம் பதிகம்

- கஜபூசைச் சுந்தர சுவாமிகள்

பெரியநாயக்கன்பாளையம் என்னும் ஊர் கோவைக்கு வடக்கே மேட்டுப்பாளையம் செல்லும் பெருவழியில் ஏறத்தாழ 20 கி.மீ. தூரத்தில் உள்ளது. பலவகைத் தொழிற்சாலைகளும், கல்வி நிறுவனங்களும், வணிக நிறுவனங்களும் நிரம்பிய பெரிய சிற்றூர் அல்லது சிறியபேரூர்.

இவ்வூரின் முக்கியப் பாதையிலேயே ஒரு ஆலயவளாகம் புத்தம் புதியதாகத் தோற்றுவிக்கப் பெற்று 2.2.1977 அன்று திருக்குட முழுக்காட்டு நடைபெற்றது. அதையொட்டி இயற்றப் பெற்ற இப்பனுவல்கள் கும்பாபிஷேகச் சிறப்பு மலரோடு துணைமலர் என்னும் பெயரில் மேற்படி ஆலய நிர்வாகிகளால் வெளியிடப் பெற்றுள்ளது.

இந்தப் பெரியநாயக்கன்பாளையத் தொடர்பாக விநாயகர் பதிகம்ஒன்று, முருகர் பதிகம் ஒன்று, சிவபெருமான் பதிகம் ஒன்று. வேணுகோபாலர் பதிகம் ஒன்று ஆக மொத்தம் நான்கு பதிகங்களும், இறைவிக்குப் பஞ்சரத்தினம் ஒன்றும் ஆகக்கூடுதல் ஐந்து பிரபந்தங்கள் உள்ளன. இவற்றையன்றித் தனிப்பாடல்களாக ஐந்து செய்யுள்கள் இருக்கின்றன. இவற்றை முறையேகாண்போம்.

சித்தி புத்தி விநாயகர் பதிகம், காப்பு வெண்பா ஒன்று, நூலாகக்கட்டளை கலிப்பாக்கள் பத்து என மொத்தம் பதினொரு செய்யுள்களாலானது. "பெரிய நாய்க்கப்பதி சித்தி புத்தி விநாயகத் தெய்வமே" என்பது இதன் மகுடம் ஆகும். நம்பியாண்டார் நம்பிகள் பற்றிய குறிப்பு இருபாடல்களில் (4.5) இடம்பெற்றுள்ளது. ஐந்தாவது வேதமாகிய பாரதத்தை எழுதிய விநயாகரே தமிழ் வேதமாகிய மூவர் தேவாரம் வெளிப்பட உதவினார் என்னும் தொனி சிறப்பாக அமைந்துள்ளது. எளிய சொற்களில் அமைந்ததொரு இனியபதிகம் இது.

அடுத்த கல்யாண சுப்பிரமணியர் பதிகம் காப்பு ஒன்று. நூலாகப் பத்து எழுசீர் விருத்தங்கள் என மொத்தம் பதினொரு பாடல்களைக் கொண்டது. "கல்யாண சுப்பிரமண்ணியனே" என்னும் மகுடத்தை

உடையதாக இப்பதிகம் இயற்றப் பெற்றுள்ளது. இப்பதிகத்தில் ஆங்காங்கு கந்தரலங்காரக் கருத்துக்களைக் காணமுடிகிறது. பதிசுத்ததை அடுத்துத் திருப்புகழ்ப்பா ஒன்று உள்ளது.

இதில் அன்பர் பணி செய்யவிட்டு இன்பநிலை அருள வேண்டப்படுகிறது.

இந்தப் பஞ்சரத்தினம் காப்பு வெண்பா ஒன்று, நூலாக அந்தாதித் தொடை பெற்ற நேரிசை வெண்பா, கட்டளைக் கலித்துறை, வெண்டளைக் கலிப்பா, பன்னிரு சீர்க்கழி நெடிலடிச் சந்த விருத்தம் (இரட்டையாசிரியம்), நேரிசை ஆசிரியப்பா ஒவ்வொன்று என ஐந்துபாக்கள் ஆக மொத்தம் ஆறு செய்யுள்களை உடையது. பொதுவாகப் பஞ்சரத்தினம் அந்தாதி நடைபெற்றாலும் மண்டலிப்பதில்லை. இந்தச் சிற்றிலக்கியம் மீனாட்சியம்மன் முன்மனங்க சிந்து வேண்டுவதாக எளிமையாக அமைந்துள்ளது.

இத்தலத் தொடர்பான ஐந்தாவது பனுவல் வேணு கோபாலர் பதிகம் ஆகும். இது காப்பு வெண்பா ஒன்று, நூலாக எழுசீர்ஆசிரிய விருத்தங்கள் பத்து என மொத்தம் பதினொரு கவிகளான் இயன்றுள்ளது. ‘இராதாருக்மணியுடன் வாழ்வேணுகோபாலமாதவனே’ என்னும் மகுடத்தைக் கொண்டது. இந்தப் பதிகம் அனைவராலும் சொல்லித்துதிப்பதற்கு ஏற்றவாறு மிக எளிமையான சொற்களால் தெளிவான பொருளமைதியுடன் இயற்றப்பட்டுள்ளது.

இதனையடுத்து இலிங்கோற்பவர், தட்சிணாமூர்த்தி, கல்யாணநவக்கிரகம் ஆகிய மூர்த்திகளுக்கு ஒவ்வொரு தோத்திர விருத்தமும், கடைசியாக நூல் முழுவதற்குமான நூற்பயன் விருத்தம் ஒன்றும் இடம் பெற்றுள்ளன.

பொதுவாகப் பெரிய நாயக்கன்பாளையப் பதிகங்கள் பக்திச் சுவைக்கு முதன்மை கொடுத்து, அனைவரும் பயன் கொள்ளும் படிஎளிமையாக இயற்றப்பட்டுள்ளன எனலாம்

- தொடரும்

# சைவப் பெருங்கருணை சேக்கிழார்

- மகேஸ்வரி சற்குரு

சென்ற இதழின் தொடர்ச்சி:

கண்ணப்ப நாயகனார் கதை நாம் தெரிந்தபடி உரைப்போம் என்று சொல்லியவாறே சேக்கிழார் கண்ணப்பன் என்ற சிவப்பக்தன் வரலாற்றையும் சொல்ல ஆரம்பிக்கிறார் இலைமலிந்த சருக்கத்தின் மூன்றாவது இப்புராணம் ஆகும்.

**கண்ணப்ப நாயனார்**

18 திருப்பாடல்கள் மூலமாக விளக்குகிறார். கதை திருப்பதிக்கு அருகிலுள்ள திருக்காளத்தியில் நிகழ்ந்தது மலையும் மலையை சார்ந்த குறிஞ்சி நிலப்பகுதியாகும். காளத்திமலைக்கு அருகில் உள்ள பொத்தப்பி நாடுதான் கண்ணப்ப நாடு ஆகும் “பூவலர் வாவி சோலை சூழ்ந்த பொத்தப்பி நாடு” வாவி என்பது இங்கு குளம் என்பதாகும். குளத்தில் பூக்கின்ற நீர்ப்பூக்களும் சோலைப்பூக்களும் சூழ்ந்து மணம் பரப்பும் இடமாகப் பொத்தப்பி நாடு உள்ளது என்று பாடுவது பின்னர் கண்ணப்ப நாயனாரின் சிவமணம் பரப்பும் செய்கையைச் சொல்லும் முன்னேற்றப்படாகும். இந்நாட்டின் உடுப்பூர் தலைநகரம் அந்நகரின் வேலி யானையின் கொம்புகளால் இடப்பட்டதாகும். வேலியிடும் அளவு யானைகள் இருக்கின்றன என்பது அதன் செழிப்பை காட்டுவதாகும் “வன் தொடர் வேலி கோலி” என்று சேக்கிழார் குறிப்பிடுவதால் எங்கும் இடைவெளியின்றி தொடராக போடப்பட்ட வேலியினால் மற்ற கொடிய மிருகங்கள் தங்களையும் தங்கள் மான்களையும் சேவல் கோழிகளையும் தாக்கா வண்ணம் பாதுகாப்பு வளையமாக குன்றுவர்களுக்கு இருந்தது என்பதைச் சொல்வது அவரது கரிசனத்தைக் காட்டுக்கிறது

**மக்களின் தன்மை**

வேட்டுவர் குலத்தில் வாழ்கின்ற பகுதி உடுப்பூர் என்று சொன்னவர் அவர்களின் தன்மையையும் பாடுகிறார். வேட்டை தொழில் சார்ந்த குணம் கொண்டவர்கள் ஆகையால் எப்பொழுதும் சத்தமாகப் பேசுவதுடன்“கொல் ஈட்டியை எறி குத்து” என்று கேக்குரல் இடுவராம் சிறுபறை அடிப்பது உடுக்கை முழங்குவது ஊது கொம்பில் பலம்

கொண்ட மற்றும் ஊதுவது என்ற வேட்டுவ இசை ஒருபுறம். தினை அரிசி புடைக்கும் சத்தம் ஒருபுறம் இருக்கும் ஆயினும் இந்த ஓசைகள் எல்லாம் மீறி அருவியின் “ கல் கல்” என்ற சத்தம் கேட்கிறதாம். கானகத்தையும் மலைமுகடுகளையும் நம் கண்முன்னே இந்த ஒருப்பாடலில் கொண்டு நிறுத்தியது சேக்கிழாரின் பதிகம் வேட்டுவ குழத்தவர் கூட்டத்தில் நாமும் இணைந்தது போன்ற உணர்வு.

**வெல்படைத் தறுகண் வெஞ்சொல் வேட்டுவேர் கூட்டந்தோறும்**
**கொலடஎறி குத்து என்று ஆர்த்துக் குழுமிய ஓசை யன்றிச்**
**சில்லரித் துடியும் கொம்புஞ் சிறுகணா குளியுங் கூடிக்**
**கல்லெனும் ஒலியின் மேலுங் கறங்கடிசை அருவி எங்கும்**

ஆக மகிழ்ச்சி பொங்கும் வேடர்குலத்து தலைவனாக நாகன் இருக்கிறான். அவரது மனைவி தந்தை இவர்களது ஒருமித்த காதலும் முருகப்பெருமானின் மேல் இவர்கள் கொண்ட பக்தியும் இணைந்து நல் மகவு பிறந்தது.

- கருணை தொடரும்

# எங்கும் வெற்றி எதிலும் வெற்றி

- திரு. பச்சையப்ப தேவராசன்

சென்ற இதழின் தொடர்ச்சி:

அறிவுப் பூர்வமான ஆன்மிக அணுகு முறைகள் யதார்த்த உணர்வுடன் கூடிய நிறை மனப்பான்மை அமைதியான ஆக்கப் பூர்வமான செயல்கள் ஆகியவை எப்போதும் இன்பம் அளிப்பவை. திருத் தொண்டிலே நிறை கண்ட திருநாவுக்கரசர், "இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை" என்றார். பாண்டிய நாட்டின் முதலமைச்சர் பதவியை உதறித் தள்ளிய மாணிக்கவாசகர் இறைப் பணியில் இறைவு கண்டவர்.

நிறைவென்பது பட்டம், பதவி, பணம், வசதிகளால் வருவது அன்று. இவையெல்லாம் பெற்றுள்ள பலர் நிம்மதியின்றியும், அமைதியின்றியும் வாழ்வது கண்கூடு. வாழ்வில் தத்தமக்கு கிடைத்துள்ள வாய்ப்புகளோடு, அவற்றை முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டு, திருப்தியாக வாழ்வதே வாழ்வாங்கு வாழும் கலை.

அதே போல் அவரவர் தத்தம் கடமைகளை, திறம்பட, பலனில் பற்றின்றி (சுயநல நோக்கமின்றி), அசுத்தையின்றி, ஆடம்பரமின்றி செவ்வனே ஆற்றி முடிப்பதால் பெறுவதே நிறைவு. அது ஒரு பரிசு அல்ல. அதுவே வாழ்க்கை முறை. (way of Life) .

அதே போல், மகிழ்ச்சியை மனப் படிக்கமாக்கிக் கொள்ளலே வாழ்கலை ஆகும். "எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா" என்றான் பாரதி. "குறையொன்றுமில்லை" என்ற மூதறிஞர் ராஜாஜி தம்வாழ்வில் பதவிகளால் பெறாத நிறைவை, இராமாயணக் கதையை சக்கரவர்த்தித் திருமகன் என்றும், மகாபாரதத்தை 'வியாசர் விருந்து' என்றும் எழுதினார். "உலகில் எல்லாமே நல்லது தான் எல்லோரும் நல்லவரே" என்ற நிறை மனப்பான்மையும், ஆக்க பூர்வத்தையும், எதையாவது செய்து கொண்டே இருக்கும் சுறுசுறுப்பும், நிகழ்காலத்தில் வாழும் தேர்ந்ததிறமையும், சாதனைப் படைக்கத் துடிக்கும் தன்னம்பிக்கையும், உயர்ந்த குறிக்கோளுடன் கூடிய வாழ்வும், என்றைக்கும் எல்லோருக்கும் மன மகிழ்ச்சியைத் தருவதாகவே இருக்கும்.

ஆனால், நவீனமயமான வாழ்க்கையில் விடிந்தால் பிரச்சினைகள், முன்யோசனை திட்டமிடல், விஞ்ஞான அணுகுமுறை எல்லாம் மீறி, நெருங்கியோர் நலமின்மைகளாலும், நெருடல்களாலும், மற்றோர்களாலும், அலட்சியங்கள் அவமானங்களாலும் எழும் ஏமாற்றங்கள் ஏராளம். எப்போதும் எல்லோரும் எல்லா நற்குணங்களும் மேலோங்கி நிற்பார்கள் என எதிர்பார்க்க முடியாது. உணர்ச்சிமயக் கோபமும், கத்தலும், ஆத்திரமும், அவசரமும், பழிவாங்கலும், பகைமையும் ஆக்கபூர்வமான தீர்வுகளைத் தரா.

ஆலோசித்தல், அன்பு காட்டல், அரவணைத்தல், மறத்தல், மன்னித்தல், விட்டுக் கொடுத்தல், ஆரப்போடல் என அறிவுப் பூர்வமான, அமைதியான, நேர்மையான, நீர்மை நிறைந்த அணுகு முறையே நிரந்தரமான நல்ல தீர்வுகளைக் கொடுக்கும். கஷ்ட நஷ்டம். போறாத காலம் என்று பொறுத்துப்போவதே விவேகம், போனதை எண்ணிட புழுங்கிப் புலம்பிப் பயனில்லை கவலை தான் நரகம்.

தீர்க்க முடியாத தர்ம சங்கடங்களும் காலத்தால் மாறும் என தைர்யத்துடன் கவலையின்றி இருக்கப் பழக வேண்டும். மன உளைச்சலும், கவலையும் உடல் நலத்தைக் கெடுக்கும். வாழ்வைப் பாழாக்கும். மன நோயாக அவற்றை முற்றவிடக் கூடாது, அவற்றை வென்று மீள்வதே வாழும் கலை.

தனக்குவமை இல்லாதால் தாள் சேர்த்து, அதாவது கடவுளின் மீது பாரத்தைப் போட்டுவிட்டு மனக்கவலையை விடு என்கிறார் திருவள்ளுவர். உணர்ச்சிக்கு இடம் கொடுத்தால் தனக்கும் சுகம் இல்லை, தன்னைச் சார்த்தோருக்கும் சுகம் இல்லை என்பதைப் புரிந்துகொண்டு, அறிவு வழியில் அன்றாடம் பணிகள், ஆக்கப் பணிகள், தொண்டு, சத்சங்கம் என ஈடுபட கவலைகளை மறந்து, மனம் நிறைவும் மகிழ்வும் பெறும்.

இசை, மழலைச் செல்வங்களை கொஞ்சி மகிழ்தல், விளையாட்டு, நகைச்சுவை உணர்வு, பொழுதுபோக்குக் கலைகளில் (Hobbies) ஈடுபடல், தியானம், யோகா, போன்றவற்றுல் மனத்தைத் தளர்த்திக் கொள்ளவும், மாற்றிக் கொள்ளவும் கற்க வேண்டும். பிரார்த்தனையால் சொல்லில் அடங்காப் பயன்களுடன் ஆண்ம பலமும் கூடும். உள்ளம் உருகி வேண்ட உள்ளோளி(Gnner - Vision ,Gntution) வழிகாட்டும் என மகாத்மா காந்தியடிகள் போன்றோர் தங்களது சொந்த அனுபவங்களைக் கூறியுள்ளனர்.

மனம் விரியும்...

# வண்ணச்சரபரின் பஞ்சரத்தின மாலை

முனைவர் நெல்லை ந. சொங்கலிங்கம்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் சமயநல்லிணக்க உணர்வும் சமூதாய நலச் சிந்தனையும் தமிழ் மீது அளவு கடந்த பற்றும் கொண்டு தமிழை வலுப்படுத்திய இலக்கிய இமயமாக விளங்கியவர் வண்ணச்சரயம் தண்டபாணி சுவாமிகள் ஆவார், கி.பி.1839-1898 வரை வாழ்ந்த சுவாமிகள் செந்தமிழைச் செழுந்தமிழாக்கிய செம்மல் ஆவார். அப்பெருந்தகை நெல்லையப்பரிடம் அழுத்தமான பற்றுக்கொண்டு விளங்கிய அருளாளர் நெல்லையப்பர் மீது, நெல்லையப்பர் பதிக மண்டலம் நெல்லை இதழ்கல் அந்தாதி, நெல்லைகலம்பம், தில்லை பாதி நெல்லை பாதி, நெல்லைத் திருப்புகழ், எனப் பன்நூல்கள் போற்றிப் பணிந்தவர்; சுவாமிகள் நெல்லையப்பர் மீது “பஞ் சரத்தினமாலை”என்றொரு நூல் பாடிப் பரவியுள்ளார் இந்நூலின் சிறப்பினை எடுத்துரைக்கும் போக்கில் அமைகின்றது இக்கட்டுரை.

**நூல் நுவலும் செய்தி:**

ஐந்து வகை இரத்தினங்கநூல். ஆன அணிகலன் மாலை போல இந்நூல் ஐந்துவகையான பாவடிவங்களால் ஆனது என்பது தெரியவருகின்றது. இந்நூல் 51 பாடல்களைக் கொண்டு விளங்கும் ஒரு சிறு நூல்தான் என்றாலும் ஒரு சிற்றிலக்கிய வகைக்குரிய இலக்கண மரபு தழுவிய நூலாகும். இதன், கடவுள் வாழ்த்துப் பாடல் வருமாறு.

**“நெஞ்சறிந்திட நெல்லை யீசனைப்**
**பஞ்சரத்தினமாலையாற் பாடிடக்**
**குஞ்சரத் தெழிலானக் கொண்டலுங்**
**கஞ்மாமுகக்ந்தனுங் காவலே”**

என்பது காப்புச் செய்யுளாக அமைந்துள்ளது, விநாயகப் பெருமானும் வடிவேல் முருகனும் காத்து அருளும் வண்ணம் சுவாமிகள் வேண்டியுள்ளார். திக்கெல்லாம் புகழும் திருநெல்வேலி புலமை வளம் செழித்த புலமையாளர்கள் பலர் தோன்றித் தமிழுக்குத் தொண்டு செய்த ஊர் என்பதனை எண்ணிய சுவாமிகள் நூலின் முதற்பாட்டிலேயே பதிவு செய்து விடுகின்றார்.

திருநெல்வேலியின் பல்வேறு சிறப்புக்களையும் வண்ணச்சரபர் பஞ்சரத்தின மாலையில் வியந்தும் உயர்த்தியும் கூறிப் பெருமிதங்கொள்கின்றார். அவற்றைக் காண்போம்!

**“செந்தமிழ்ச் சீர்காட்டுந் திருநெல்வேலியூர் சிவனே (பஞ்ச 1)”**
**“கண்ணும் கருத்தும் கனிதமிழும் கார்க்குலமும்**

**விண்ணும் மண்ணும் பல்லுயிறும் வெய்யோன் முதற்பிறவு**
**நண்ணு திருநெல்லை நகராளும் நாயகனைப்**
**பண்ணுலவு செந்தமிழாற். பாடியவர் பற்பலரே” (பஞ்ச 3)**

நெல்லையையும் நெல்லையப்பரையும், பாடிப் பரவிய தமிழ்ப் புலவர்களையும் வெல்லும் வகையாற் கூறிப் போற்றும் சுவாமிகளின் மனநலம் மகிழ்ந்து போற்றும் வண்ணம் உள்ளது.

**“பொற்பறாத் திருநெல்வேலி யூரினர் பூதநாதர்” (மேலது,4)**

**“முழவதிர் விழவொடு மூங்கில் நிழல் வள**
**திருநெல்லை யூர் சிவனே” (மேலது, 6)**

**“செய்யவார் சடைமேற் பிறை சூடிய**
**சித்தனே யருட் சீரார் திருநெல்வேலி (மேலது, 9)**

**“தவமே முயன்று எழில் நெல்வேலி ஆளுந் தனித்தெய்வமே (மேலது,12)**

**“ஊரிற் சிறந்த நெல்லை” ) ( மேலது, 43)**

**“சீருலாம் பொதியைத் திகழ்பெருங்குவேட்டுக்**
**காருலாம் பொழிற்றென கலந்து பொருநைப்**
**புனலாற் நெல்லையூர் போற்றுக்**
**சினகரத்தர் தரு தெய்வ நாயகனே (பஞ்சரத்தின. 45)**

இப்படிச் சுவாமிகள் நெல்லையூரையும், நெல்லயப்பரையும் நெல்லை வளத்தையும் தமிழ்ப்புலமை செழிப்பையும் மறவாமல் போற்றி பாடிச் செல்லும். பாங்கு எண்ணி எண்ணி மகிழும் வண்ணம் உள்ளது

**வாழ்வியல் பதிவுகள்**

வண்ணச்சரபர் நெல்லையில் திருமடம் ஒன்று அமைக்க விரும்பி அவ்விடத்தில் கிணறு நேர்மை ஏற்பாடுகள் யாவும் செய்து முடித்தார் பல அன்பர்களிடம் பண உதவி கேட்டுள்ளார் சிலர் சுவாமிகளை ஏளனம் செய்து எள்ளிநகையாடினார், மேலும் தோண்டபட்ட கிணற்றில் தண்ணீர் வரவில்லை, வெறும் பாறையாகப் போய் விட்டது.

இவ்வருத்தவுணர்வு நெல்லையப்பரிடம் முறையிட்டுப்பாடும் பதிவுகள் சுவாமிகளின் வாழ்வியலில் ஏற்பட்ட மனத்துயரை வெளிக்கொண்டு வரும் போக்கில் பாடல்கள் அமைந்துள்ளன.

**தூய புகழ் வேணுவனச் சுந்தரனே யென் மனதை**
**நீயறிவாய் இன்றி இந்த நீணிலத்தில் ஆர் அறிவார்.**
**மாய வலை கண்ணாரும் மக்களுமே தஞ்சமென்னுந்**
**நீயர்பலர்கூடி நிந்தை செய்யாமற் செய் தருளே' (பஞ்சரத் 8)**

இன்னொறு பாடலில் நெலலையப்பரிடம் கெஞ்சிக் கேட்கும் தன்மையில்,

**ஆள்வர் யெனறி இத்தனை நாட கெஞ்சிக் வாடியலுந்து நின்பொற்**
**றாற் வாஞ்சை யொன்றும் தவிர்கின்றேலேன் எனைந்தள்ளிவிடேல்**
**(பஞ்சரத் 17)**

எனவரும் அடிகளின் வாயிலாக நாம் அறித்து கொள்ள முடிகின்றது.

**புராணக்கூறுகள்**

சிவபெருமான் நஞ்சுண்ட வரலாறு முப்புரம் அழித்த வரலாறு எனப் பல புராணக்கூறுகளையும் வண்ணச்சரபர் விதந்து கூறியுள்ளார்.

**"நஞ்சயின்றவர் நால்வரைக் காத்தவர்.**
**காரணகடந் தொன்றாகி நின்றவர்" (பஞ்சரத்தின. 14)**

**"வானமாவி வளர்த்துள்ள வேணுவனத்து முத்தர்**
**கானவர் வேடமிட்டு அன்றோர் விசையனைக் கண்டு பொரு"**
**(மேலது,33)**

**"ஏமனைக் கொன்றொரு தொண்டணைக் காக்கு மெழியத்தார்"**
**(மேலது,22**

நெல்லையப்பரைப் போற்றும் வண்ணச்சரபர் காந்தி மதியம்மையை உடன் பாடிப் போற்றத்தவறவில்லை.

**"வரை யாகங் காந்திமதிக் கீந்துள்ளார் நெல்லையம் பலத்தே"**
(மேலது27)

**"காரிற் சிறந்த குழற் காந்திமதிக் தாயார் தம்**
**வாரிற் சிறந்த முலை வள்ள நுகர் வாழ்வுறுமே" (பஞ்சரத்தி. 43)**

இப்பச்சூத்தின் மாலை நூலை முடிக்கும் போது வண்ணசரபர்,

**தஞ்சமென வருவாரைத் தாங்கு திருநெல்வேலித்தலை வனர்க்குப்**
**பஞ்ரத்தினங்களினும் பயப்பதே கலந்தனை பாடன்மாலை**
**வஞ்சமின்றிப்பாடியதன் பனைந்த வண்ணமிங்கு வருமே**
**கஞ்சமலர் மீதிருக்கு மிருமடவார் பணிகேட்டுக் களிகூர்வாரே**

என்று நூலை முடித்துள்ளார்.

வண்ணச்சரபம் தண்பாணிசுவாமிகள் நெல்வேலிச் சூழ் நெல்லையப்பர் காந்தித்தாய் இவ்விருவரின் புகழைப் போற்றிய தமிழ்ப்புலமை தன்பொருகையாற்றின் வெள்ளம் போல் நிறைந்து சிறந்துள்ளது என்பது தெற்றெனப் புலப்படுகின்றது. பயன்பட்டநூல்: நெல்லை இலக்கியங்கள் சிரவை கௌமாரசபை கோவை. 49, 2018

- தொடரும்

# 76 ஆம் ஆண்டு சுதந்திர தின விழாவை ஒட்டிய சிறப்புக் கருத்தரங்கு

- கி.சுப்பிரமணியன் ( ஐ.கே.எஸ்)

சென்ற இதழின் தொடர்ச்சி:

ஆங்கிலேயர்கள் கப்பலில் துப்பாக்கி பீரங்கியுடன் வந்து வன்முறையில் இறங்கிக் கொடுமை பல செய்தனர். கோட்டை கொத்தளங்களை அழித்தார்கள் புதுமையான வலிமை வாய்ந்த போர்க் கருவிகளை எதிர்கொள்ள தமிழர்களால் முடியவில்லை. அரசியல் உருவாகாத காலம். பெருந்தலைவர்கள் இல்லை; ஒன்றுபடுத்த இயலவும் முடியாது. சாதி, சடங்கு, சமயம், பெண்ணடிமை எனப் பெரிய பெரிய கருமேகங்கள் தமிழகத்தை மூடியிருந்தன. இவற்றைக் கண்டு அருளாளர்கள் நொந்து போனார்கள். படித்த புலவர்களிடையேயும் ஒற்றுமை இல்லை; ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொண்டார்கள். எவை போல? ஒன்றை ஒன்று வெறுத்துப் பகைக்கும் நாய்கள் போல? எப்படி வாழ்ந்திருக்க வேண்டும் காகங்கள் போலக் கூடிப் பகுத்துண்டு வாழவேண்டும்

**காகப்புள் இனத்தோடு கலவாது**
**ஞானிபோல் பகைக்கும் காவலர் பலரே**

என்கிறது. அறுவகை இலக்கணம் படித்தவர் நிலை இது என்றால் படிக்காதவர் நிலை என்ன சொல்ல? பஞ்சம் பட்டினி, வறட்சி, தொழில் நசிவு என்ற கொடுமைகள் 19 ஆம் நூற்றாண்டில் தமிழகத்தை வாட்டி வதைத்தன் பஞ்ச நூற்றாண்டு என்றே அதைக் குறிப்பிட்டார்கள்

அரசு ஒப்புகொண்டபடி நூறாயிரம் மக்களுக்கு மேலும் உணவின்றி இறந்து போனார்கள். ஈஸ்வர ஆண்டு பஞ்சம் என்று அதற்கு பெயர், களிமண் உருண்டைகளை உண்டு மக்கள் சில இடங்களில் வருந்தினர் (கே. கே. பிள்ளை) இந்த நிலைமை - கால- வேற்றுமை பற்றி எண்ணி அதை மாற்ற முயல வேண்டாமா? வாளா இருப்போர் சிறுமையினர்ரே என்று சரபர் பாடிகிறார்

**கால வேற்றுமை கருதாப்புலவர்**
**சீலரே எனினும் சிறுமையினர்ரே**

என்று கண்முன்னால் நடப்பவற்றை மறந்து விட்டு ஞானம் பேசுவதால் பயனில்லை வாய்ச்சொல்லில் வீரனடி என்று பாரதி

பாடுவதன் முன்னோட்டம் இது: வள்ளாருக்குப் போலவே இவருக்கும் எதிர்ப்பு வந்திருக்கக் கூடும். அவர் தோற்றம் நெஞ்சத் துணிவு அவர் பணியை பாதிக்கவில்லை.

முன்னர் குறிப்பட்டது போலத் தமிழ்ச் சமூகம், சாதி, குலம் எனப் பிளவுப்பட்டு பூசல்களில் போர்க்களமாக இருந்தது, பசி, பஞ்சம், பட்டினி ஒருபுறம் மேல்மட்டத்துச் செல்வர்கள் புறக்கணிப்பு வேறுபுறம்; வறுமையின் கோரப்பிடியில் சிக்கி இருந்த ஏழைகளின் நிலைமை ஆங்கில அரசு மதமாற்றத்திற்கும் பயன்படுத்திக் கொண்டது. அரசும் கிறித்துவ அமைப்புகளும் 19 ஆம் நூற்றாண்டில் ஏற்படுத்திய இந்த சமூக அமைப்பை மாற்றி விட்டது. ஆங்கில அரசின் சூழ்ச்சியால் கிராமத்துக் கை தொழிகள் அழிந்து போயின. இந்த நிலையில் மக்கள் இழந்தவற்றைத் பெறுவதற்காகப் போராட வேண்டியிருந்தது. அதற்கு அடிப்படை சமூக ஒற்றுமையே என்பதை வழியுறுத்தி பல பாடல்கள் சரபர் பாடினார்.

விதைவைப் பெண்கள் மறுமணம், கலப்புத்திருமணம், சமஉரிமை, சாதிவேறுபாடற்ற சமநிலை, ஊருக்கு உதவல், கற்றவர்கள் தாம் பண்பட்டுச் சமுதாயத்திற்குப் பயன்படவும் வேண்டும் என்ற அறிவுரை எனப் பல்வேறு நிலைகளில் சரபர் சீர்திருத்தக் கருத்துகளை முன் வைத்தார்

**தவமும் சக்தியும் சமயமும் பொருளும்**
**அங்கண் தொடும் கணைக்கு ஆற்றாது**
**மயலால் கழிவது மாநிலத்து இயல்பே.**

என்று அறுவகை இலக்கணத்தில் சரபர் வலியுறுத்தும் கலப்பு கழிவது மூலம் இவை சாதி சமய குல வழிபாடுகள் தாமாக ஒழியும்; அப்படி நேரும் போது ஒற்றுமை மலர்ந்து விடுதலை உணர்வு தோன்றும் எனவும் சுட்டுகிறார்

ஆங்கில ஆட்சியில் அரசு வன்முறை எல்லை மீறி நடந்தது. பாமரமக்களை மட்டுமல்லாமல் கற்றவர்களையும் அச்சுறுத்தி வைத்தார்கள் ஏனென்று கேட்பதற்கு யாரும் இல்லை, ‘இம் என்றால் சிறைவாசம் ஏனென்றால் வனவாசம்’ என்ற சொற்கள் அன்று மெய்யாளன உருவம் தந்தன. இந்த ஆட்சியின்கீழ் இருந்த பண்ணையக்காரர்கள் செய்த கொடுமை சொல்லும் தரமன்று ஆங்கிலேய அரசுக்கு கப்பம் கட்டிவிட்டு, மக்களுக்கு தாங்க முடியாத பல வரிகளை விதித்தனர். பேராசிரியர் கே.கே பிள்ளை எழுதுகிறார்.

- தொடரும்

# பொங்கல் விழா

- தவத்திரு. குமரகுருபர சுவாமிகள்,
சிறப்பாசிரியர்

பொங்கல் என்றாலே புதுமணம் கமழ்வது. தமிழ் நாட்டில் விவசாயத் தொழில் சார்ந்த விழா பொங்கல் விழா என்று கூறலாம். "உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்" என்றார் பாரதி. உயிர்வாழ்தவற்கு உணவு எவ்வளவு முக்கியம் யாவரும் அறிவர். உணவு உற்பத்திக்கு மழை, சூரிய ஒளி, மாடுகளின் உழைப்பு எல்லாம் இன்றியமையாதது. தைமாதம் பிறப்பதற்கும்முன்பே அநேகமாக அறுவடை எல்லாம் முடித்துவிடும். ஆண்டு முழுவதும் தான் பாடுபட்டதற்கான பயனை உழவன் காண்கிறான். அந்த மகிழ்ச்சியில் இறைவனுக்கு நன்றி செலுத்துகின்றான்.

உழவர்கள் தாம் உழைத்துப் பெற்ற புது அரிசியைப் பொங்கி இறைவனுக்குப் படைத்து வணங்குகின்றனர். ஆகவே இதை நன்றி செலுத்தும் திருநாள் என்றே கூறலாம். ஆதியில் மனிதர்களிலே ஒவ்வொருவரும் தத்தம் வாழ்க்கைக்காக மட்டுமே தொழில் புரிந்தனர். இந்த நிலை மாறி மக்கள் பலர் ஒரேஇடத்தில் கூடித் தொழில் செய்யும் கூட்டுறவு முறை உழவர் தொழிலில் இருந்து துவங்கியிருக்க வேண்டும். தொழில் துறையில் ஒருமைப்பாடு தோன்றிய புனித நிலம் மருத நிலமேயாகும்.

தமிழகத்தில் ஆதி உழவன் தான்பாடுபட்டு உற்பத்தி செய்த உணவுப்பொருளைத் தனக்காக மட்டும் வைத்துக் கொள்ளவில்லை. அந்த தானியத்தை ஆறு பங்காகப் பிரித்தான். ஒரு பங்கு அரசனுக்கு நாட்டின் நிர்வாகத்தை நடத்த வரிசெலுத்தினான். ஒரு பங்கினை மூதாதையர்களுக்காக ஒதுக்கினான். மீதமுள்ள பங்கினை தெய்வத்திற்கும், விருந்தினர்களுக்கும் உறவினர்களுக்கும் தனது குடும்பத்துக்காகவும் ஒதுக்கினான்.

**தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல்தான்**
**என்றாங்கு ஐம்புலத்தார் ஓம்பல்தலை**

என்ற குறள் இதை விளக்குகிறது

பொங்கல் திருநாளை அனைத்து மக்களும் ஒற்றுமையுடன் கொண்டாடும் திருவிழாவாகும்.

அறுவடைக்குப்பின் விழாக் கொண்டாடுவது உலகத்தின்

பாகங்களிலும் உண்டு. அமெரிக்கர்கள் பல ஆண்டிற்கொருமுறை 'நன்றி செலுத்தும் திருநாள்' என்று கொண்டாடுகிறார்கள். தமிழர்கள், ஆடல், பாடல், இசை, ஆறு, கோயில்கள், நீர்நிலைகள் இவைகளில் பெரும் பற்றுடையவர்கள் என்பதற்கு ஓர்அறிகுறியாகும்.

பொங்கலிட்டு அடுப்பிற்கும் நைவேத்தியம் செய்யும் வழக்கம் ஒருசில இடங்களில் உண்டு. பொங்கலைச் சிறிது அடுப்புக்கு அர்ப்பணித்து பின் பொங்கலை உண்ணும் வழக்கம் உண்டு.

குடும்ப பொங்கல் விழாவில் ஒவ்வொருவரின் ஆன்மீகப் பொங்கலும் உள்ளடங்கியிருக்கிறது. நமது உடம்பு ஒரு சிறிய குடிசை. அதனுள் நாம் (ஆன்மா) வாழ்கின்றோம். நம்மோடு ஐவர் (பொறிபுலன்) இலவசமாக வாழ்வதோடல்லாமல் நம்மை அடக்கி ஆளவும் பார்க்கிறார்கள். இவர்களை நாம் வென்று மதுரச்சோறு தினம் பொங்கிப் பகிர்ந்து உண்டு வாழ வேண்டும். இதுவே ஆன்மீகப்பொங்கல் ...

சங்க காலத்தில் அறுவடை காலத்தில் நல்மழை பொழிவும், நாடு செழிக்க பெண்கள் இந்நோன்பை கடைபிடித்தார்கள். தை முதல் நாளில் இந்த நோன்பை முடிப்பார்கள். நல்ல விளைச்சல் கொடுத்தமைக்காக பூமி, பகலவன், வேளாண்மைக்கு உதவிய கால்நடை போன்றவற்றிகு நன்றி தெரிவிக்கும் விதமாக சர்க்கரைப் பொங்கல் படைத்து வழிபட்டனர். இதுவே நாளடைவில் மூன்று தினங்கள் கொண்டாடும் பொங்கல் விழாவாக மாறியது. பொங்கல் பண்டிகையைப் பொறுத்தவரையில் எக்காலத்திலும் வேளாண்மையைத் தொடர்புடையதாகவே இருந்துள்ளது என்பது யாவரும் அறிந்த உண்மையாகும்.

இலக்கிய காலத்தில் இவ்விழா இந்திர விழாவாக கொண்டாடப்பட்டுள்ளது. மணிமேகலையில் விழாவரைக் காதையில் இந்திரவிழா என்ற பெயரில் பொங்கல் விழா கொண்டாடப்பட்டது. அக்காலத்தில் இவ்விழா இருபத்தி எட்டு நாட்கள் கொண்டாடப்பட்டதாக வரலாற்றில் காணமுடிகின்றது. இன்று இவ்விழா மூன்று நாட்கள் மட்டும் கொண்டாடப் படுகின்றது.

இவ்விழாநாளில் பகைமை, பசி நோய் நீங்க இறைவனை முன்னோர்கள் வழிபட்டனர். மழைக்குரிய தெய்வம் இந்திரனை வழிபட்டால் மாதம் மும்மாரி பெய்து பயிர் செழிக்கும் என மக்கள் நம்பினர். பிற்காலத்தில் சூரியன் பற்றிய அறிவு மக்களுக்கு வந்தவுடன் சூரியனுக்கு பொங்கலிடும் வழிபாடு தோன்றியுள்ளது.

‘தை பிறந்தால் வழி பிறக்கும்’ என்பது தமிழர்கள் நம்பிக்கை பொங்கல் விழா மக்களால் கொண்டாடப்படுகிறது. உழைக்கும்தமிழ் மக்கள் தாமே கண்டுணர்ந்து தமது உழைப்பிற்கு உதவிய இயற்கைக்கும். தம்மோடு சேர்ந்து உழைத்த பசுக்களுக்கும் நன்றி தெரிவிக்கும் விழா. உழவர்களுக்கு மழையின் உதவியால்ஆடி மாதம் முதல் உழைத்துச் சேர்த்த நெல்லை மார்கழியில் வீட்டிற்குக் கொண்டு வந்து தமது உழைப்பின் பயனை நுகரத் தொடங்கும் நாளே தைப்பொங்கல்.

இந்த விழா நான்கு நாட்கள் நடைபெறுகின்றன. முதல் நாள் போகிப்பண்டிகை அல்லது இந்திரன் பொங்கல். ‘பழையன கழிதலும் புதியன புகுவதும் வழுவென தகுமே’ என்பதற்கேற்ப நமது உள்ளத்திலுள்ள பழைய எண்ணங்களை புதிய சிந்தனையை வளர்த்துக் கொள்ளுதல் எனலாம். இரண்டாம் நாள் பெரும் பொங்கல் இதை ‘‘சூரியப்பொங்கல்’’ என்றும் கூறுவர். மூன்றாம் நாள் ‘‘மாட்டுப்பொங்கல்’’ என்றும் ‘‘பட்டிப்பொங்கல்’’ என்றும் கூறும் வழக்கம் உள்ளது. நான்காம் நாள் ‘‘கன்னிப்பொங்கல்’’ அல்லது ‘‘பூப்பொங்கல்’’ என்றும் கூறுவர். தை மாதத் தொடக்கத்தில் சூரியன் தென்திசைப் போக்கி நிறுத்தி வடதிசை நோக்கி திரும்பும் தினத்தில் கொண்டாடப்படும் விழாவாகும்.

மங்கலம் பொங்க மக்கள் உழைக்க வேண்டும். பஞ்சம் பட்டினியுமின்றி நாட்டு மக்கள் நலம் பெற்று வாழ வேண்டும். பொங்குக பொங்கல் வளமான நாட்டில் தான் முயற்சியும் முன்னேற்றமும் உண்டு. மக்கள் நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வமும் பெற்று நீடினிது. வாழ வாழ்த்துகின்றோம் அனைவருக்கும் நல்வாழ்த்துக்கள்,

**பஞ்சம் பறக்க என்று இன்பம் சுரக்க என்று**
**பழமை மடிக என்று பொங்குக பொங்கல்**
**புதுமை மணக்க, என்று பொங்குக பொங்கல்**

# பக்த மான்மியம்

# ஐம்பத்தைந்தாவது பிம்பாசி பத்தர் கதி

திரு. வே. சத்திய நாராயணன்

பிரமனைத் தந்த நாரணன் தன் திருக்கரத்தால் துளசிதாசரின் சரித்திரத்தை எழுதினான். அத்தகு புகழுடையவரும் பெருந்தவம் வாய்ந்தவருமான துளசிதாசரின் சரித்திரத்தை இதுவரை உரைத்தேன். இனி மாதவனாகிய திருமால் அருளால் எண்ணற்ற லீலைகள் செய்யும் வண்ணம் ஞானமுற்ற பிம்பாசி பத்தரின் சரித்திரத்தை இனிச் சொல்லத் தொடங்குகின்றேன்.

**காளிதேவி உபாசகன்**

பிம்பாசி என்பான் அத்தினாபுரியை ஆளும் மன்னன். களங்கம் ஏதும் மற்ற மனத்திட்பமுடையவன்; நற்குணங்களால் மலையை ஒத்த உயர்வுடையவன். உள்ளத்தில் பத்தியுடன் காளிதேவி உபாசனை புரிந்து வழிபட்டு வந்தான். அவ்வாறு விளங்குகின்ற நாளில் அவனுடைய பத்தியைக் கண்டு காளிதேவி அருள் வழங்க எண்ணினாள். கானகத்தில் தவம் செய்யும் யோகியர்க்கும் எய்த அரிதான மெய்ஞ்ஞானத்தைக் காளிதேவி பிம்பாசிக்குத் தேவி அருளினாள். அதனால் காணும் புவி முதலான யாவும் மாயப்பொருள் என்று தெளிந்தான். அதனால் அவன் உள்ளம் எதிலும் ஈடுபடவிலலை. எனினும் மணமுடைய துளசி மாலை அணிந்த திருமாலைக் காணும் வேட்கை அவன் உள்ளத்தில் ஏற்பட்டது.

எப்போதும் தன் தொழும் குலதெய்வமாகிய காளியிடம் தன் வேட்கையைக் கூறி வேண்டிக்கொண்டிருந்தான். ஒருநாள் அம்பிகை அவன் கனவில் தோன்றி, திருமாலைக் காணும் பேறு மெய்ஞானமும் புண்ணியமும் பெற்றவர்க்கன்றி விண்ணில் வாழும் மயங்கி உழலும் மானிடர்களால் காண்பது எளிதாகுமோ? ஆனாலும் திருமாலின் மெய்யான அருள் அவதாரமான கண்ணபெருமான் காட்சியை உறுதியாகப் பெறுவாய், நாளை காலை உன்னால் காணப்பெறும் சில தூயவர் உன்னுடைய விருப்பினை அடைய உதவுவர்; வருந்தாதே என்று கூறி மறைந்தான். மன்னன்

கனவிலிருந்து விழித்துக் காளிதேவி அருளைப் போற்றிக் களிப்புடன் எழுந்தான்; இராமானந்தர் சீடர்கள் வருநல் அரசவை மண்டபத்துதைப் பிம்பாசி அடைந்தபோது இராமானத்த அடிகள் என்பாரின் சீடர்கள் வந்தனர். மன்னவன் அவர்களைக் கண்டு மகிழ்ந்து அவர்களின் திருவடிகளை வணங்கிப் போற்றினாள். மெய்த்துறவுடைய அவர்களை வழிபட்டு உணவுண்ணச் செய்த பின் அவர்களிடம் ‘தண்ணிய அருள் வாய்ந்தவர்களே! நானும், இராமானந்த சாமிகளின் திருவடிக்கு ஆளாகி உங்களைப் போன்றே தொண்டு புரிந்து வாழும் வாழ்க்கையை விரும்புகின்றேன். எனது விருப்பம் நிறைவேற அடியேன் செய்யவேண்டியது யாது என்றுரைத்து அருள்ளீர்’ என்று வேண்டினான். இராமானந்த சாமி சீடர்கள் ‘எம் குருநாதரின் திருமடத்திற்கு நீ வருக; உன்னிடத்தில் பரிபக்குவம் உண்டாயின் உள்னையும் அவர் சீடனாக ஏற்பார்’ என்று மொழிந்தனர். அரசனும் பின்னாளில் தாளே வந்தடைவதாகச் சொல்லி உரிய முறைப்படி வழியனுப்பி வைத்தான்.

**இராமானந்தரைக் காணச் செல்லுதல்**

பிம்பாசி மந்திரிகளை அழைத்து, நூலறிவுடைய நுண்ணுணர்வுடையவர்களே! மனம் திகைக்கின்றபடி கனவு ஒன்றனை இரவில் கண்டேன். ஒரு பேய் என்னோடு வலிய சண்டைக்கு வந்த நான் தோல்வியுற்றேன். அதனை நினைத்துப் பார்க்கும்போதே என் உள்ளம் நடுங்குகின்றது. இந்தப் பயம் நீங்கிடக் காசி மாநகர் செல்ல விரும்புகின்றேன்’ எனச் சொன்னான். பின் மன்னவன் தன்னகரில் தங்கியிருந்த இராமானந்தர் திருமடத்திற்கு சேனைகள் தொடரப் பக்தியுடன் சென்றான்.

அரசன் இராமானந்தர் திருமடத்தின் முன்பே தன் படைகளை நிறுத்தித் தான் மட்டும் உள்ளே நுழைந்து சீடர்களை வணங்கித் தன் வருகையை குருநாதர்க்கு வேண்டினான். அவர்கள் சென்று குருநாதருக்குக் கூறிய அளவில் அவரும் அரசச்சின்னங்களைக் களைந்த பின் அரசனை அழைத்து வருமாறு ஆணையிட்டார். குரு இராமானந்தர் கட்டளையைக் கேட்ட பிம்பாசி மிகவும் மகிழ்ச்சி அடைந்தான்.

- தொடரும்

உ

குருவே துணை!

கோவைசிரவணபுரம் கௌமாரமடாலயம்

அருள்மிகு தண்டபாணி சுவாமி திருக்கோவில்

# தைப்பூசத் தேர்ப்பெருவிழா

அன்புடையீர்,

நிகழும் மங்களகரமான சுபகிருது ஆண்டு தை மாதம் 18- ம் நாள் (01.02.2023) புதன்கிழமை முதல் தை மாதம் 23ம்நாள் 06.02.2023 திங்கட்கிழமை முடிய தைப்பூசத் தேர்ப் பெருவிழா நிகழ்ச்சியில் குறிப்பிட்டுள்ள வண்ணம் நடைபெறும்.

அன்பர்கள் வந்து கண்ணினால் அவர் நல்விழாப் பொலிவு கண்டார்ந்து மண்ணினிற் பிறந்த பெரும் பயன்பெற்றுப் பொலிய அழைக்கின்றோம்

–

**நிகழ்ச்சி நிரல்**

| | | | |
|---|---|---|---|
| 01.02.23 | புதன்கிழமை | மாலை 4.00 மணிக்கு | விநாயகர்வேள்வி |
| | | மாலை 6.30 மணிக்கு | நிலத்தேர் வழிபாடு(வாஸ்து சாந்தி) |
| 02.01.23 | வியாழக்கிழமை | காலை 10.30 மணிக்கு | கொடியேற்றம், திருவீதி உலா |
| | | மாலை 4.00 மணிக்கு | தெருவடைச்சான் மகாரதத்தில் விநாயகர் குமரகுருபரர்,வள்ளி அம்மை, தெய்வ யானையார் சிவபெருமான் தனித்தனி வாகனங்களில் திருவீதி உலா |
| 03.02.23 | வெள்ளிக்கிழமை | பகல் 12.00 மணிக்கு | பூசை திருவீதி உலா |
| | | இரவு 07.00 மணிக்கு | திருக்கல்யாணம், குதிரைவாகம் திருவீதிஉலா |
| 04.02.23 | சனிக்கிழமை | காலை 06.30 மணிக்கு | குமரகுருபரக்கடவுள் திருத்தேருக்கு எழுந்தருளல் |
| | | காலை 09.00 மணிக்கு | காவடிப் பூசை |
| | | காலை 10.30 மணிக்கு | மூலவருக்கு மகாபிஷேகம்,பூசை |
| | | பகல் 01.00 மணிக்கு | அன்னதானம் |
| | | மாலை 05.00 மணிக்கு | கலை நிகழச்சிகள் |
| | | **மாலை 04.00 மணிக்கு** | **தேர்** |
| 05.02.23 | ஞாயிற்றுக்கிழமை | பகல் 12.00 மணிக்கு | பூசை, திருவீதி உலா |
| | | மாலை 04.00 மணிக்கு | தேவாரப் பண்ணிசை |
| | | மாலை 06.30 மணிக்கு | திருவிளக்கு பூசை |
| | | மாலை 07.00 மணிக்கு | சரவணப்பொய்கையில் இந்திரவிமானத் தெப்பத் திருவிழா |
| 06-02-23 | திங்கட்கிழமை | காலை 11.00 மணிக்கு | நடராசர் திருமஞ்சனம், தரிசனம், தீர்த்தவாரி |

**குமரகுருபர சுவாமிகள்**
தலைவர், கௌமார மடாலாளம்
கோவை. 641-049.
தொலை தொலைபேசி - 2666370

இங்கனம்
**கௌமாரசபை அறக்கட்டளை**
**மற்றும் தைப்பூச விழாக்குழுவினர்**

# சிரவையாதீனத் தலைவர் பங்கு பெறும் நிகழ்ச்சிகள்

| | | |
|---|---|---|
| 15.01.23 | ஞாயிறு | மேட்டுப்பாளையம் பொங்கல் விழா |
| 18.01.23 | புதன் | மேட்டுப்பாளையம் வேடர் காலனி பட்டத்தரசி அம்மன் கோயில் நீராட்டு.*காரமடை முருக பக்தர்கள் பேரவை திருவிளக்கு வழிபாடு. |
| 21.01.23 | சனி | சரவணம்பட்டி இரத்தனகிரி பால்குட விழா. |
| 22.01.23 | ஞாயிறு | உடுமலை தேவனூர் புதூர் ஆண்டியூர் காசி விசுவநாதர் திருக்கோயில் வேள்வி. |
| 23.01.23 | திங்கள் | கவுந்தப்பாடி காசிலிங்க கவுண்டன் புதூர் மாரியம்மன் திருக்கோயில் நீராட்டு. |
| 26.01.23 | வியாழன் | மடாலய வளாகம் ஆருத்ரா கபாலீஸ்வரர் திருக்கோயில் வேள்வி. லக்கேபாளையம் மதுர காளியம்மன் திருக்கோயில் கால்கோள் விழா |
| 27.01.23 | வெள்ளி | பொள்ளாச்சி மாரியம்மன் திருக்கோயில் நீராட்டு. கள்ளிப்பாளையம் வீரமாச்சி அம்மன் திருக்கோயில் நீராட்டு |
| 30.01.23 | திங்கள் | கணபதி பழனி ஆண்டவர் திருக்கோயில் கொடியேற்றம். |
| 31.01.23 | செவ்வாய் | திருவாமாத்தூர் திருக்கோயில் வேள்வி. |
| 01.02.23 | புதன் | அன்னூர் சாலையூர் பழனியாண்டவர் திருக்கோயில் நீராட்டு * புளியம்பட்டி இராமலிங்க சௌடேஸ்வரி திருக்கோயில் வேள்வி |
| 09.02.23 | வியாழன் | கம்போடியா |

# தை மாத திருவிழாக்கள்

| தமிழ் | ஆங்கிலம் | கிழமை | வழிபாடு |
|---|---|---|---|
| தை 01 | சனவரி 15 | ஞாயிறு | தைப்பொங்கல்/தேய்பிறை அஷ்டமி (பைரவர் வழிபாடு) |
| தை 02 | சனவரி 16 | திங்கள் | மாட்டுப்பொங்கல், திருவள்ளுவர் தினம், |
| தை 03 | சனவரி 17 | செவ்வாய் | காணும்பொங்கல், உழவர் தினம், விசாகம்) |
| தை 05 | சனவரி 19 | வியாழன் | பிரதோஷம் |
| தை 07 | சனவரி 21 | சனி | தை அமாவாசை |
| தை 11 | சனவரி 25 | புதன் | சதுர்த்தி |
| தை 12 | சனவரி 26 | வியாழன் | சஷ்டி |
| தை 16 | சனவரி 30 | திங்கள் | கிருத்திகை |
| தை 18 | பிப்ரவரி 1 | புதன் | ஏகாதசி/ தைப்பூசம் விழா ஆரம்பம்,விநாயகர் வழிபாடு |
| தை 19 | பிப்ரவரி 2 | வியாழன் | கொடியேற்றம்,தெருவடைச்சான் /பிரதோஷம் |
| தை 20 | பிப்ரவரி 3 | வெள்ளி | திருக்கல்யாணம் |
| தை 21 | பிப்ரவரி 4 | சனி | தைப்பூசம் / பௌர்ணமி / திருத்தேர் |
| தை 22 | பிப்ரவரி 5 | ஞாயிறு | திருவிளக்கு வழிபாடு, தெப்பத்தேர் |
| தை 23 | பிப்ரவரி 6 | திங்கள் | தீர்த்தவாரி |
| தை 24 | பிப்ரவரி 7 | செவ்வாய் | மகம் |
| தை 23 | பிப்ரவரி 9 | வியாழன் | சங்கடகர சதுர்த்தி |
| தை 24 | பிப்ரவரி10 | வெள்ளி | தை கடைசி வெள்ளி/கருணாம்பிகை அம்மன் சந்தனக்காப்பு |

# சமயம் வளர்க்கும் சான்றோர்களுக்கு
# சிரவை ஆதீனத்தில் விருதுகள் வழங்கப்பட்டன
















Kaumara Amudham (Tamil Monthly) Periodical - December 2022.
Regd. with the Registrar of Newspapers for India under No. Tam 14083/2001 .
Date of Publication: 10th of every month.





அனுப்புதல் : கௌமார அமுதம், கௌமார மடாலயம், சின்னவேடம்பட்டி, கோவை - 49.